பகத்தால் அஜபா(த்தியானம்) செய்தலாகிய இதுவே பிராணயாமலக்ஷணம். இப்படியாக ஸ்மிருதிரத்நம் என்கிற கிரந்தத்தில் பிராணயாம லக்ஷணம் சொல்லப் பட்டிருக்கிறது.

ஸ்தூலப் பிராணபாமத்தை நாம் இங்கு அதிகமாய் விவரிக்கவில்லை. ஏனெனில் அது குருமுகமாக வுணர்ந்து குரு ஸந்நிதானத்திலிருந்து செய்யப்படவேண்டியது. அப்படிச் செய்யாமல் ஏட்டுப்படிப்பைக் கொண்டு செய்வதால் அனேக அநர்த்தங்கள் நேரிட்டு அதனால் ஆபத்து அநர்த்தங்கள் அனேகம் நேரிடக் காரணமாகிறது. ஆகையால் அதை விட்டு, சூக்ஷ்மப் பிராணயாமம், காரணப் பிராணபாமம் இரண்டையும் சாஸ்திரங்களில் சொல்லியபடி விரித்துரைத்துள்ளோம். நாரத பகவான் திரிபுவன வாஸி யாகையால் அவர் "பிராணயாமம்" என்பதற்கு ஸூக்ஷ்மமாகவே யர்த்தம் சொல்லியிருக்கிறார். "சரீரத்தில் வாயுவை நிக்ரஹம் செய்வதே பிராணபாமம்" என்று அவர் சொல்லியுள்ளதை முதலிலெடுத் துரைத்தோம்.

இப்படி வாயுநிக்ரஹம் செய்து, நிரோதிக்கப் பட்ட வாயுவானது மயிர்க்கால் நகக்கண்களின் வழியாகக் கூட வெளிப்போகாதபடி காக்கவல்ல தீரனான யோகி, அப்படிப்பட்ட மஹா தீரமான பரிபூரணவாயுநிக்ரஹத்தால், பிராணனைத் தன்னிதயக மலத்திலிருந்து தானே சிருஷ்டிக்கும் சமர்த்தனாகிறான். ஏனெனில் ஸம்பூரணமான வாயு நிரசித்தத்தினால் முற்றும் நிரோதிக்கப்படின் அது அண்டாகாரமாகி அகண்டத்தைத் தன்னுளடக்கிக் கொண்டிருக்கும். அந்த அகண்டத்தைத் தியானம் செய்வதால், மௌந ஸித்தி யென்று சொல்லும் மோனகுருதரிசனம் லபிக்கும்.

1 "மோனகுரு நாதர் நடமாடி வருசீலமுறு
2 கானமிகுநாதவொளிகேட்டெழுந்துணர்வினுள்ளே
3 ஏனமிலாசோதியருதரிசனங்காண்டுகொள்வான்
4 ஈனமிலா வானநிறை வாயுதனி லலைந்துறைந்து
5 தீனமுடை நெஞ்சனாய் வட்டமிட்டதனுளொரு சக்
[காக்கோட்டைகட்டி
6 மானமுடனபிமான சாரமது உண்மையினி லுள்ள
[படி விட்டரைத்து
7 ஏனமிசை சூயவனவன் கைப்பிடிக் கிசைந்துவீணை
[திரிகைமண்ணாய்
8 வானமிசை விரிசடையோன் கைப்படியி லஹமு
[மவன்மயமேயாகி
9 மோனவுரு வானவொரு வதிர்சயங் காண்டுகொள்
[அன்பிலமுதே!"

மோனகுரு தரிசனங் கிடைத்தால் ஆத்மோத்தாரணமென்கிற "திருப்பள்ளியெழுச்சி" சம்பவிக்கும். ஆத்மோத்தாரணமானால், அப்படி உத்தாரணம் செய்யப்பட்ட ஆத்மசக்தியானது 'த்ரியம்பகமாய்' (திரிவிதமான சக்தியாய்) ப்பிரிந்து ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி முத்தொழில்களையும் தானே செய்ய வல்லதாகும்.

ஆக்கியழித்துக் காப்பதாம் இந்த முத்தொழிலையும் செய்வதாமோர் அற்புத ரகஸியத்தையே "நிரோதாஜ்ஜாயதே வாயு:" என்றும், "வாயோரக்நிச்சஜாயதே" யென்றும், "அக்நேராபச்சஜாயந்தே" யென்றும் சொல்லலுற்றார். தானாக யோகசாஸ்திர மியற்றிய யோகயாஜ்ஞவல்கியர். இப்படி ஆக்கி யழித்துக் காக்கும் சக்தி தனக்கிருப்பதை யுள்ளுணர்வால் உணருங் காரணத்தால் "தீயோ யோநப் பிரசோதயாத்" என்கிற "ஸவிது:" என்னும் பதத்துக்கு லக்ஷியமான அந்தக்காரணவிருத்தியானது(அஹம் என்னும் நான்) நிருபாதிக நிலையடைந்து, சமஷ்டியர்த்தகமான "தத்ஸவிதுர் வரேணியம்" என்னும் மந்திரத்துக்கு லக்ஷியமான பரமாத்மாவை, "பர்கோ தேவஸயதீமஹி" என்னும் மத்தியபாதமான கும்பக லக்ஷணத்தால் அஜபாத்தியாநம் செய்ய அருகமாகிறது. இந்த அனுபவத்தை "கருடவாஹன

குரு கடாக்ஷ வீக்ஷண்ய பிராப்தரஸ்து" என்னும் மந்திரத்தின் தரிசனமான "மோந குரு நாதர்" என்னும் பாட்டில் மந்திரதிருஷ்டானுபூதியாகச் சொல்லி யிருக்கிறார். அங்கே (1) முதல் அடையாளமிட்டுள்ள—முதலடியினால்—"மோநகுரு"வாம் அருவுருலக்ஷணமும்,

2-ம் அடியினால்—நாதானுஸந்தானத்தால் லபிக்கும் ஆத்மோத்தாரண லக்ஷணமும்,

3-ம் அடியினால்—நிருபாதிக நிலையில் "ஸ்வரூப ஸூந்ய"மென்கிற 'சொரூப நாச'ஹேதுவான அரூபதரிசன லக்ஷணமும்,

4-ம் அடியினால்—பிராணாயாம லக்ஷணமாகிய பரிபூரணவாயுநிரோதத்தால் ஸித்திக்கும் தஹராகாசத்திற் பிறக்கும் பிராண லக்ஷணமும்,

5-ம் அடியினால் — சித்தவிருத்தி நிரோத ஸித்தியும் (அதனால்)ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார சக்தி லப்தியும், (இதற்கு கருட தரிசனம் என்று பேர்.) *

6-ம் அடியினால்—"கார-சார" மென்கிற ஸ்ருஷ்டி ஸ்திதி சாதனமும், (Anabolic and Katabolic principles that go to produce Metabolism.)

7-ம் அடியினால்—காரண காரிய உபாதனமாகிய த்ரிகுணாத்மகமான 'பிராணப் பிரஜ்ஞாத்ம' ஸ்வரூப ஸாதக லக்ஷணமும்,

8-ம் அடியினால்—"ததேவார்த்தமாத்ர நிர்ப்பாஸம் ஸ்வரூப சூன்யமிவ ஸமாதிः" என்ற யோகஸூத்ரப்படி அங்க லிங்க சங்கமரூபஸமாதிலக்ஷணமும்,

9-ம் அடியினால்—"தியாயந் முச்சியேத பந்தநாத்" என்ற வாச்சியத்திற்கு லக்ஷியார்த்தமான மோனஸித்தியென்னும் மௌன ஸமாதி லக்ஷணமும்.

கூறப்பட்டிருப்பதை "பிராணாயம ஸித்தி" பூர்வகமாய் ஆய்ந்துணர்ந் தறிந்து கொள்க.

இதுவே பிராணாயமத்தின் பூரணமான பலனும். இந்தப் பிராணாயாமஸித்தியைக் "கேவல கும்பக' மென்று சிவயோகதீபிகையில் ஸ்ரீ சதாசிவ யோகீந்திரர் சொல்லி யிருக்கிறார்.

"கும்பகேந அஜபம் குர்யாத்' என்ற ஸ்மிருதிரத்ந கர்த்தாவின் பிராணாயாமலக்ஷணப்படி, "கேவல கும்பகம்" என்றால் என்னவென்று பார்க்கில், அஜபாத்யாநம் கேவலமாக அதாவது, பிரயத்னபூர்வமாயின்றி தானே தானாக ஸித்திப்பதாம். இது வாயுநிரோத அப்பியாஸ முதிர்ச்சியாலும் "தாரணத் தியான ஸமாதி" யென்னும் பிராணாயம லக்ஷணங்கள் மூன்றும் பொருந்திய யோகஸம்யம ஸித்தியினாலுமே லபிக்க வேண்டுமென்றி வேறுவிதமாக அடையக் கூடியதில்லை. இது நிச்சயம், நிச்சயம். ஓம் தத்ஸத்.

———(:o:)———

## FREE FROM BONDS.

### The Autobiography of a Taluk Gumastah.

(Special for the Vivekachintamani)

### * அவிழ்த்துவிட்ட கழுதை.

ஒரு தாலூகா குமாஸ்தாவின் சரித்திரம்.

(விவேகசிந்தாமணிக்கென்றெழுதப்பட்டது)

### III-கௌமாரம்: உத்தியோகம்.

——:-:——

(221-வது பக்கத் தொடர்ச்சி)

என் தம்பி பி. ஏ. பரீக்ஷைக்குப் படித்துக் கொண்டிருந்த பொழுது பெண்களைப்பெற்ற எவ்வளவோ பெரிய மனுஷியர்களெல்லாம் என்னைக் காணவந்தார்கள் என்று முன்னமேயே

* கருடன், அனந்தன் முதலாகிய இவர்கள் நிருபாதிகஸித்திபெற்ற நித்தமுக்தர்களான 'நித்ய ஸூரிகள்' என்று சொல்லப்படுவர். புருஷஸூக்தம் பார்க்க.

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கு மனம் தடையறியாது! அடக்கமும் ஸ்வதந்திரமும் பரஸ்பர விருத்தமான குணங்களல்ல!!

சொல்லியிருக்கிறேன். ஆனால் நான் என் தம்பியின் கலியாணத்தை என் கலியாணத்தைப் போல் தர்ருமாருக விடக்கூடாதென்று, அவனே பெண்ணைப் பார்த்துத் தன்னிஷ்டப்படி கலியாணம் செய்து கொள்ளும்படி விட்டு விட்டேன். அவனும் அப்படியே ஒரு பெரிய குடித்தனக்காரர் பெண்ணை நிச்சயம் செய்துகொண்டுவந்தான். இவ்வளவு சீர் செய்யவேண்டுமென்றாவது கையில் பணம் கொடுக்கவேண்டுமென்றாவது நானும் பேசவில்லை, என் தம்பியும் பேசவில்லை. ஆனால் அவன் மாமனார் தன்னுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி நூறு ரூபாய் பெறுமான பனரீஸ்பட்டும் 500 ரூபாய்க்கு வெள்ளிப் பாத்திரங்களும் தீபாவளிக்கு ஆயிர ரூபாய்க்கு வைரக் கடுக்கன்களும் வாங்கிக் கொடுத்தார்.

என் தம்பிக்குக் கலியாணமாகி மூன்று வருஷங் கழித்து அவன் பி. எல். பரீக்ஷைக்குப் படிக்கும்போது அவனுக்குச் சாந்தி முகூர்த்தம் நடந்தது. அப்பொழுது நான் என் தம்பி மனைவிக்கொரு தங்கக் கொலுசு செய்து கொடுத்தேன். அந்தக் கலியாணத்தோடுகூடவே என் பெண்ணுக்கும் கலியாணம் நடந்தது. என் மாப்பிள்ளை பி. ஏ. பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தார். அவருக்கு நான்கு வேலி நிலம் குடித்தனமுண்டு. 500 ரூபாய்க்குச் சீர்தவிர வரதக்ஷிணையொன்றும் கொடுக்கவில்லை. அதையும் மற்றக்கலியாணச்செலவுகளையும் என் மாமனாரே "ஒப்புக்கொண்டு செய்ததுந் தவிர தீபாவளிக்கு என் மாப்பிள்ளைக்கு பைஸிகில்" என்று சொல்லப்பட்ட மிதிவண்டியொன்றும் வாங்கிக் கொடுத்தார். என் பெண்ணையும் புருஷன் வீட்டுக்கனுப்பியாகி விட்டது. இப்பொழுது என் மாப்பிள்ளை தன் கிராமத்திலேயே விவசாயம் செய்துகொண்டு ஏழைப்பிள்ளைகளுக்கு இனமாகப் படிப்புச் சொல்லிக்கொடுக்க ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தி யிருக்கிறார். தினம் இரண்டுமணி நேரம் தானே சில பாடங்கள் சொல்லிக் கொடுத்துக் கொண்டும் வருகிறார். என் மாமனார் 'பென்ஷன்' வாங்கிக்கொண்டது முதல் என்மகன் சென்னப்பட்டணத்தில் என் தம்பி வீட்டில் படித்துக்கொண்டிருக்கிறான். என் தம்பிக்கொரு பெண் பிறந்திருக்கிறது. என்வீட்டில் இத்தனை கலியாணங்கள் நடந்தும் ஒன்றையும் நான் மேற்போட்டுக்கொண்டு செய்யவேண்டிய அவசியமில்லாமற் போனமையால் எனக்கு உலக வியவகாரங்களிலுள்ள ஞானம் முன்சொன்ன அளவிலேயே நிற்கிறது. நான் முதல் முதல் என் மாப்பிள்ளையின் தலை தீபாவளியில் "பைஸிகிலை"க் கண்டபொழுது சாந்திக் கலியாணமாவதற்கு முன் நடைவண்டி வாங்கிக்கொடுக்கவேண்டுமா? குழந்தை பிறந்த பிறகு வாங்கிக் கொடுத்தாற் போதாதா ? அதுவும் இவ்வளவு விலையுயர்ந்த நடைவண்டி எதற்கு ? சாதாரண மரத்தினால் செய்த சிறுவண்டி போதாதா ?', என்று என் மாமனாரைக் கோபித்துக்கொண்டேன். என் மாமனாரும் மைத்துனிமாரும் சிரித்தார்கள். என் மாப்பிள்ளை அதில் ஏறி சவாரிசெய்யக் கற்றுக்கொள்வதற்கு 2-மாத மாயிற்று. அதற்குள் முழங்கால் கணுக்கால்களில் இரண்டு மூன்று இடங்களில் காயம். வைத்தியருக்குப் பத்து ரூபாயும் சவாரி கற்றுக்கொடுத்தவருக்குப் பத்து ரூபாயும் தக்ஷிணை. பிறகு தன் கிராமத்தில் சவாரி செய்யத்தக்க சாலைகளில்லாமையாலும், அப்படிச் செய்தாலும் மாடுகன்றுகள் முன்னே வெருண்டு கொண்டும், நாய்கள் பின்னே குரைத்துக் கொண்டும் ஓடுவதனாலும் அருவருப்புக் கொண்டு 250-ரூபாய்க்கு வாங்கின அவ்வண்டியை ஒரு வருஷத்துக்கெல்லாம் நூறு ரூபாய்க்கு விற்றுவிட்டார். இதில் என் மாமனாருக்கு வெகு வருத்தம். தன் மாப்பிள்ளைதான் இப்படியிருக்கிறா என்றால் மாப்பிள்ளைக்கு மாப்பிள்ளையும் அவ்வாறே இருக்க வேண்டுமா என்றிருக்கலாம்.

இக்காலத்தில் நம் தேசத்தவர் புலியைப் பார்த்துப் பூனை சூடிக்கொண்டதுபோல் மேற்றிசையாரைப்போல் நமக்கும் சுய அரசாட்சி வேண்டுமென்று மகாஜன சபைகள் கூடிப் பிரசங்கம் செய்கிறார்கள். சுய அரசாக்ஷி என்றால் என்ன அர்த்தம்? அவ்வளவு மேலான சுய அரசாட்சி பெற்ற மேற்றிசையாரையே "என்ன ஐயா சௌக்கியந்தானா?" என்றால், "ஏதோ அப்படி இப்படித்தா னிருக்கிறோம். இன்னும் முற்றிலும் சுகப்பட்ட பாடில்லை. எங்கள் நாட்டுப் பொதுஜன சபைகளையும் அச்சபையாரை நியமிக்கும் விதத்தையும் முற்றிலும் சீர்திருத்தின பிற்பாடுதான் நல்லகாலம்" என்கிறார்கள். பொதுஜன சபைகளைச் சீர்திருத்துவதெப்படி? ஆயிரம் பிச்சைக்காரர்கள் சேர்ந்து ஒரு கஜானா ஏற்படுத்துவ தெப்படியோ, அல்லது லக்ஷம் வெள்ளை நூல்களைச் சேர்த்து ஒரு சிவப்புச் சீலை உண்டாக்குவ தெப்படியோ அப்படித்தான் ஒவ்வொருவனும் தன்னை ஆண்டுகொள்ளாத சுய ஆளுகை! கும்பல் கூடின உடனே சித்தித்து விடுமா? ஒவ்வொருவனிடத்திலுமில்லாத சீர்திருத்தம் பொதுஜன சபையில் எங்கிருந்து வரும்? மேற்குச் சீமைகளில் ஜனங்கள் ஏற்படுத்திய சபைகளை ஜனங்கள் சொன்னபடி கேட்கிறதில்லை என்று புகாராயிருக்கிறது. தேசத்து ஜனங்கள் முழுவதும் சேர்ந்து பேசுகையில் காத்தனே மந்திரியாக வேண்டுமென்று அபிப்பிராயப் பட்டிருக்க தனித் தனி ஒவ்வொரு ஊரிலுமுள்ளவர்கள் சேர்ந்து நியமனம் செய்கையில் சாத்தனே தவறாமல் மந்திரியாகிறானாம். அல்லது காத்தனே மந்திரியானாலும் மந்திரியாவதற்கு முன்னிருந்த காத்தன் வேறும் மந்திரியான பின்னிருக்கிற காத்தன் வேறுமாக விருக்கிறானாம். "அடிமையாயிருந்த காலத்தில் யஜமானன் சோறு போட்டான். சுதந்திரம் கிடைத்தபிறகு எங்களுக்குப் பட்டினி கிடந்து சாகச் சுதந்திரமுண்டு. எங்களை யாரும் ஏன் என்று கேட்க அதிகாரம் பெற்றவர்களல்ல' என்று வருஷத்தில் இரண்டு தடவை (தடவைக் காறுமாதம்) வேலையகப்படாமல் அலைகிறவர் சிலர். பகல் 8 மணி முதல் இரவு 10 மணி வரையில் மூச்சு விடாமல் தாயுங் குழந்தையுமாக அல்லது குழந்தையுந் தாயுமாக ஆயிரக் கணக்காய் ஒரே நச்சுவேலையைச் செய்திறப்பவர் சிலர். தங்கள் கூலியை உயர்த்த வேண்டுமென்று ஒரே கும்பலாய் வேலையைப் பாதியில் நிறுத்துபவர் சிலர். இவ்வாறு எங்கும் ஒரே குழப்பமாயிருக்கிற தென்கிறார்கள். பார்க்கப்போனால் அக்கரைக்கிக்கரை பச்சை தான்.

சுய அரசாட்சியின் லக்ஷியார்த்தம் ஒவ்வொருவனும் தனக்குத் தானே ராஜாவாயிருத்தலே. ஒவ்வொருவனும் கிறிஸ்து போன்றும், ஸாக்ரடீஸ் போன்றும், நந்தனார் போன்றும் புத்தர் போன்றும், வஸிஷ்டர் போன்றும் பீஷ்மர் போன்றும் பரிபூர்ணனாயிருக்க முயன்றாலும், அவனை ராஜாக்களாவது மந்திரிகளாவது, பொது ஜன சபைகளாவது, அச்சபைகளின் அக்கிராசனாதிபதிகளாவது ஆளத் தேவை என்ன? ஆளத்தான் இடமேது? ஒருவன் அம்மாதிரி இருக்கக்கூடுமானால் லக்ஷம் பேரு மிருக்கலாம். ஒவ்வொருவனும் தன்னை யாளாமையினால் தான், பிறர் அவனை ஆள வேண்டியிருக்கிறது. தன்னைத் தானே யாள ஆரம்பித்த பின் பிறருமவனையாள இடமேது? அதாவது சர்க்கார் தன்னைச் செய்விக்கும் வேலையை ஒவ்வொருவனும் தானே பிரயோஜனமறிந்து செய்து விட்டால் என்றர்த்தம். அப்பொழுது தனக்கு வெளியே இருக்கும் சர்க்கார் தனக்குள்ளே ஆவாகனப்பட்டுப் போகிறது.

ஆனால் வாஸ்தவத்தில் ஒவ்வொருவனுக்கும் அரசிருப்பது அவனுக்குள்ளேயா வெளியிலா? "குருவிருப்பதுள்ளத்திலே மனக்கோணலறுப்பதுள்ளத்திலே" என்றார் பெரியோர். குருவே

அரசன்; குருவின் மூர்த்தமே ராஜாங்கம்; குரு வை யறிந்தவனே யறியாதவனுக் கரசன். நான் யாரை என்னை யறியாமல் வணங்குகிறேனோ அவனே உண்மையில் எனக்கரசன். எவன் வார்த்தை என்னை யறியாமல் என் மனதைக் கவர்கிறதோ அவனே என் குரு ஒவ்வொருவனுக்கு மப்படியே. சுருக்கிச்சொல்லின் எங்கும் வியாபியாய் அகண்டாகாரனுப் சர்வ பரிபூரணனுயிருக்கும் 'நான்' என்பவனுடைய சங்கல்பத்திற்கு பங்கம் வாராமல் 'நவத்துவார' தேகியாகிய 'நான்' என்பவனை நடந்துகொள்ளச் செய்யவேண்டியே அரசு ஏற்பட்டிருக்கிறது. அவ்வாறே ஒவ்வொருவனும் சுயமாகவே நடந்துகொண்டு விட்டால் ஒவ்வொருவனும் தனக்குத்தானே ராஜாவாகிவிட வில்லையா?

தன்னைஆளுகை என்பதில் பிறரை ஆளப் பிரயத்தனப் படாமையு மடங்கி யிருக்கிறது. ஏனெனில் மஹத்தான எனக்கு அன்னியமான 'பிறர்'என்று சொல்லக்கூடிய மனமேயில்லாமையாலும், அப்படியே யிருந்தாலும் அம்மனமும் மஹத்திலேக்கியப் பட்டாலொழிய, அல்லது ஐக்கியப்பட விரும்பினாலொழிய, அதை அதற்கு அன்னியமாயிருந்து யாரும் ஆளமுடியாதென்கிற உண்மையினாலுமே ஆதலால் தன்னையறிந்து ஆளாதவனே, பிறரை ஆளப் யத்தனிப்பான்.

இவ்வுலகில் ஒருவரை யொருவர் கெடுக்கவு முடியாது, கொடுக்கவு முடியாதென்பது பெரியோரறிந்த உண்மை. "இப்புவியில் ஒருவனுக் கொருவன் உதவமாட்ட வில்லையோ அல்லது மனந்தானில்லையோ தெரியவில்லை" என்றார் பேஸ்டலோஜி என்னும் மஹான். இதை யனுசரித்தே தான் "ராமனுண்டாலென்ன ராவணனுண்டாலென்ன" என்று நமக்குள் வசனமும் வழங்கி வருகிறது. அதாவது நல்லவர்களுக்கு எல்லா ராஜ்யமும் நல்ல ராஜ்யமாகவே யிருக்கும். கெட்டவர்களுக்கு எந்த ராஜ்பத்திலும் கெடுதியே விளையு மென்றர்த்தம். "மனிதனுடைய சுக துக்கங்களில் ராஜாங்கத்தார் ஆக்கவோ அழிக்கவோ கூடிய பாகம் எவ்வளவு அற்பம்?" என்றார் என் தோழராகிய ஆங்கில கவி.

ராஜாங்கம் என்பது ஒரு பாயஸ பாத்திரம். பாயஸ பாத்திரம் என்று பெயரிட்ட மாத்திரத்திலாவது அல்லது பாயஸம் வைத்திருந்த பாத்திரம் என்பதனால் மாத்திரமாவது அதில் வைத்திருக்கும் உப்பு நீர் தித்திக்குமா? அல்லது வழக்கமாய் உப்புவைக்கிற பாத்திரத்தில் பாயஸத்தை வைத்தால் அது கரிக்குமா? பாயஸம் உள்ள அளவுக்கு அது தித்திக்கும். உப்பு உள்ள அளவுக்கு அது கரிக்கத்தான் செய்யும். அதற்குப் பாத்திரம் என்ன செய்யும்? "ஹிருதய சுத்தியும் புத்தித் தெளிவும் சகல புருஷார்த்த சித்திக்கும் முற்பட்ட காரணங்களை யொழியப் பிற்பட்ட காரியங்களாகா" என்று பேஸ்டலோஜி அநுபவத்தில் கண்டறிந்தார்.

ராஜாங்கத்தாரின் முக்கியமான வேலை, ஜனங்கள் எல்லா விதத்திலும் அதாவது தேக மனோ புத்தியாத்ம தத்துவங்களி லெல்லாம் தேர்ச்சியும் விருத்தியுமடைந்து புருஷார்த்த சித்தி பெறக்கூடிய சாதனங்களை ஏற்படுத்துவதே. இதற்கு அநுகுணமாகவும் இதற்கு வேண்டிய வளவுக்கு மட்டும்தான் அவர்கள் இதர வேலைகளில் பிரவேசிக்கத்தேவை. இவ்வாறு 'குடியுயரக் கோலுயரும்.' ஆனால் இவ்வளவு முக்கியமான வேலையைச் செய்யக்கூடியவர் யார்? என்றால், ஞானிகளே. எவ்வளவுக் கெவ்வளவு ராஜாங்கத்தை ஞானிகள்வகிக்கிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு ராஜாங்கம் செழிக்கும். ஆனால் ஞானிகள் இம்மாதிரி தங்களை உலகத்தில் சம்பந்தப் படுத்திக்கொள்ள முன்னுக்கு வந்து நிற்பார்களாவென்றால், அவர்கள் அவ்

வளவு சுலபமாய்க் கிடைக்க மாட்டார்கள் என்பது வாஸ்தவந்தான். ஆயினும் அவர்களை எப்படியாவது தேடிப்பிடித்துத் தங்களுக்கு உதவி செய்யக் கோருவது ராஜாங்கத்தாரின் கடமை. அப்பொழுது லோகோபகாரத்தை உத்தேசித்து அவர்களும் சம்மதிப்பார்கள். முற்காலத்தில் ராஜாக்கள் ரிஷிகளைப்பேணி அவர்களுக்குத் தொண்டு செய்துவந்த காரணமிதுவே. "எந்த ராஜ்யத்தில் உத்தியோகஸ்தர்கள் உத்தியோகத்தை வகிக்க சம்மதமற்றிருக்கிறாரோ அந்த ராஜ்யமே நன்றாய் ஆளப்பட்ட ராஜ்யம்" என்றார் ஸாக்ரடீஸ் மஹானின் பிரதம சிஷ்யர்.

இவ்வாறு ஜனங்களின் புத்தித் தெளிவையும் விசாலத்தையும் ராஜாங்கத்தார் நாடாவிட்டால், ராஜாங்கத்தாரின் கஷ்ட நிஷ்டூரங்களை உணர்ந்துதவிசெய்யும் சக்தி ஜனங்களுக்குண்டாகிறதில்லை. இதன் பலனைப் பாருங்கள்! வரி வசூல்செய்யும் உத்தியோகஸ்தனைக் கண்டால் ஜனங்கள் ஒளிகிறார்கள். "சாராயக்கடைக்காரனுக்குக் கொடுக்கும் பணத்தைக் காட்டிலும் சர்க்காருக்குக் கொடுக்கும் வரி வீண்செலவென்று" எண்ணுகிறார்கள். "ராஜதந்திரம்" என்கிற பதம் ராஜாங்கத்தை நடத்தும் முறை என்கிற மேலான முதலர்த்தத்திலிருந்து 'ஒரு தேசத்தாரை மற்றொரு தேசத்தார் ஏமாற்றுமுறை, அல்லது, ஒரு கக்ஷியாரை எதிர்கக்ஷியார் ஜயிக்கச் செய்யும் ரஹஸ்ய ஏற்பாடுகள்" என்றர்த்தப்பட்டு வருகிறது.

ஆனால் ஜனங்கள் புத்தி விசாலித்து மனம் பலப்பட்டு வருவாராகில், ராஜாங்கத்தின் பரோபகார வேலைகளையெல்லாம் தூண்டுதலின்றித் தாங்களே செய்வார்கள். அப்பொழுது ராஜாங்கத்துக்கு வேலையும் செலவும் சிரமமும் கவலையும் குறையும். ஜனங்கள் ஞானமார்க்கத்தின் பெருமையை யறிந்துவிட்டால் ஞானத்தைத் தாங்களே தேடுவார்கள். பிறரையும் சன்மார்க்கத்தி லிழுப்பார்கள். அப்பொழுது காய் முதிரப் பூவு திருவதுபோல் பஹிரங்க ராஜாங்கம் அந்தரங்க ராஜாங்கமாகிவிடும். இதுவே உண்மையான சுய அரசாக்ஷி. மற்றதெல்லாம் போலி அரசாக்ஷி அல்லது தந்திர அரசாக்ஷி.

இதனால் எவ்வளவுக்கு ஜனங்களைச் சன்மார்க்கத்தி லிருத்தவும் ஸ்வதர்மத்தை யனுஷ்டிக்கச் செய்யவும் சட்டங்களி னுதவி தேவையில்லாம லிருக்கிறதோ அவ்வளவுக்கு ராஜாங்கம் கிருதகிருத்திய மாயிற்று என்றும், எவ்வளவுக்கு கச்சேரிகளும், வக்கீல்களும், சம்பளம்வாங்கு முத்தியோகஸ்தர்களும் குறைகிறார்களோ அவ்வளவுக்கு ராஜாங்கம் சாபல்யமாயிற்றென்றும் முன்சொன்னபடி சுபிக்ஷமடைந்த தென்றும் அறிந்து கொள்ளலாம்.

(இன்னும் வரும்.)

---

## Easy Lessons in Economics.

### Lesson VII.

### குடிவாழ்க்கை.

---

### VII பாடம்

### வேலைக்காரர்களின் தன்மை.

வேலைக்காரர்களின் கை சாதுர்யம், புத்திநுட்பம், முன் போசனை, விலாவில் தொழிலை நடத்தும் நேர்மை, கவனம், இலாபத்துக்குத வும் சாதனங்களை தெரிந்தெடுக்கும் திறமை, இலாபத்துக் குதவாதவைகளை நீக்கும் கூர்மை போன்ற காரணங்களினால் தேசத்திற்கு தேசம் செல்வம் மாறும். சில தேசங்களில் மட்டும் இவ்விதமான குணங்கள் மனிதருக்கு இயற்கை போலமைந்து வம்ச பாரம்பரியமாய் நடந்துகொண்டு வருகின்றன. சில விடங்களில் தொழிலாளிகள் தங்கள் இளம்பருவத்தில் மேற்கொள்ளும் தக்க பயிற்சியால் மேற்கண்ட நுட்ப அறிவுகளைக் கைக்கொள்ளு

கிறார்களென்றும் சொல்லுவது பிசகாகாது. தொழிலாளிகள் ஒற்றுமையுடன் ஒன்று சேர்ந்து வசிப்பதாலும், தொழில் நடப்பதை இளம் பருவத்தில் பலமுறை கவனித்துப் பார்ப்பதாலும், முயற்சியின் விசேஷம் அதிக மில்லாமலே பலர் தொழில்களை எளிதில் கற்கின்றனர். தொழிற் சாலைகளில் பலர் சேர்ந்து வேலை செய்வதையும், இயந்திரங்களைப் பிரயோகிப்பதையும், வேலைக்காரர்கள் ஒருவருக்கொருவர் ஒற்றுமையாய் செய்யுமுதவியையும், எப்பொழுதும் பிரத்யக்ஷமாய்க்காணும் சிறுவனுக்கு அதுவே ஒருவிதப் பயிற்சி யென்பதில் தடையென்ன? இதனாலன்றோ நம்முன்னோர்கள், ஜாதி யென்றும் ஜாதிகளுக்கு வெவ்வேறு தொழில்களென்றும் ஏற்படுத்தினார்களென்று எண்ணக் காரணமா யிருக்கின்றது. அவ்வேற்பாட்டின் பயனை ஆராயப்புகின்.—கம்மாளனுக்குப் பிறந்த பிள்ளை இயற்கையாகவே அத்தொழிலுக்கு அவசியமான சரீர குணங்களையமையப் பெற்றிருப்பதன்றி, இளம் பருவத்தில் தினந்தோறும் தன் தகப்பன் செய்யும் தொழிலைக் கவனிப்பதினால் அத்தொழிலைசிரமமின்றிக் கற்றுக் கொள்ளுகின்றான். தென்னை, பனை போன்ற மாமேறும் சாணார் தொழிலை அவனது பிள்ளைகள் எளிதில் கற்றுக்கொள்ளுவது போல், துணி வெளுக்கும் வண்ணான் அத்தொழிலை கற்க முயல்வதும், வண்ணான் தொழிலை சாணான் கற்கமுயல்வதும் கஷ்டசாத்தியமான்றே. இதுவே பலதொழில்களின் உண்மையாகும்.

மேலும் தொழில் செய்வோர் எத்தேசத்திலும் ஒரே தன்மையுள்ளவர்களன்று. சில தேசத்தவர் 'திரைகடலோடியுந் திரவியந்தேடு' என்பதை மனதிலிருத்தித் தங்களுக்குப் பாலாகிய திரவியத்தைக் கொடுக்கும் பசு அந்நிய தேசமென்றே கருதி நடக்கின்றனர். அங்கிலேயரையே இதற்குத் தகுந்த திருஷ்டாந்தமாகச் சொல்லலாம். இவர்கள் செல்வமொன்றையே உத்தேசித்து தமது நாட்டையும் உற்றார் உறவினரையுமிழந்து தூரதேசங்களுக்குச் சென்று திரவியத்தைச் சேகரிக்கும் தொழில்களைக் கைப்பற்றுகின்றனர்.

இங்கிலாந்திலுள்ள ஒருவனுடைய ஐந்து குமாரர்களில் ஒருவன் அமெரிக்காவிலுள்ள கன்னடாவில் இருப்புப்பாதை இஞ்சினீராகவும், இரண்டாவது குமாரன், ஆஸ்திரேலியாவில் கிறிஸ்து மதப் பாதரியாயும், மூன்றாவது மகன் இந்தியாவிலுள்ள காப்பிந் தேயிலைத் தோட்டங்களின் சூபரின்டெண்டாகவும், நான்காவது பிள்ளை, தென்னாப்பிரிகாவிலுள்ள காலனி முனையில் போர் வீரனாகவும், கடைசியானவன், சீனாவிலுள்ள 'ஹாங்காங்' என்ற பட்டணத்தில் வைத்தியனாகவு மிருக்கிறார்களென்றால் ஆங்கிலேயரின் திரவிய நாட்டத்தை என்னவென்று கூறுவது? இந்துக்களாகிய நாம் தரைமார்க்கமாய் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் பல கஷ்டங்கட்குட்பட்டு பிரயாணஞ் செய்து கடலைக்கண்டால் நடுநடுங்கி உயிரை வெல்லமெனக் கருதி நின்று விடுகின்றோம். ஆங்கிலேயரோ தரைப் பிரயாணம் கஷ்டமான தென்றும், கடற் பிரயாணமே எளிதானதென்றும் யாதொரு கஷ்டமு மின்றிச் செல்லலா மென்றும் கருதுகிறார்கள். ஐரோப்பியர்களுக்கு சாதாரணமாகவே இக்குண முரியதாயிருந்தாலும், அவர்களில் ஆங்கிலேயர் இவ்விஷயத்தில் மற்றவர்களைக் காட்டிலும் தேர்ந்தவர்கள். ஆங்கிலேயர் அமெரிக்காவிலும் ஆப்பிரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும், சுருங்கக்கூறின் உலகத்தின் ஒவ்வொரு பாகத்திலும் குடியேறி ஆங்காங்கு செல்வவிருத்தியைச் செய்துகொண்டு சிறப்பாக வாழ்கின்றனர்.

நம்முடைய தேசத்தார் இவ்விஷயத்தில் அங்கிலேயருக்கு நேர் எதிர்க் கட்சியில் நிற்கின்றனர். தடாகம் என்கிற கிராமத்தில் 250—அடி

கிணறுதோண்டி குடிதண்ணீரை யடையவேண்டும், அதுவும் உப்பு நீரே. இக்கிராமத்தில் கிடைக்கப்பட்ட பழம்கனி முதலியவைகளோ வென்றால் சப்பாத்துக்கள்ளிப் பழத்தைத்தவிர வேறொன்றும் கிடையாது. இச் சப்பாத்திக் கள்ளிகளுக்குள் கொடிய விஷப்பாம்புகளோ அநந்தம். குருடிமலையை யடுத்த ஊராதலால் கோடைகாலத்தில் உஷ்ணம் சகிக்கமுடியாது; காற்று வாட்டமில்லாத கிராமமாதலால் எப்பொழுதும் ஜனஙகள் பலவிதவியாதியால் வருந்திக் கொண்டே இருப்பார்கள். அவ்வளவு கஷ்டங்களிருந்த போதிலும், வேறொரு அயல் கிராமத்திலுள்ள ஒரு தனிகன், "நீங்கள் ஏன் இங்ஙனம் வருந்துகின்றீர்கள், நான் என்னுடைய செழிப்பான கிராமத்தில் குடியிருக்க வீடும் சாகுபடிசெய்ய பூமியும், வேறு செலவுகளுக்கு இலவசமாக ரொக்கமும் கொடுக்கிறேன், வாருங்கள்" என்று வருந்தியழைத்தாலும் தங்கள் வீட்டையும் ஊரையும் விட்டுப் போகத் துணியார்கள். இப்படியே இத்தேசத்தாரும் தாங்கள் நாட்டையும் சுற்றத்தாருடன் கூடிவாழ்வதையும் கைவிடார்கள். கையில் பத்துப் பணமுண்டானால் அது கையைவிட்டுப் போகும் வரையில் வேலைசெய்ய சம்மதியார்கள். கொடுப்பாருண்டானால் கடன்வாங்கியாவது ஜீவிப்பாரேயன்றி நிலைத்து வேலை செய்து பிழைக்க வழியறியார்கள். பிறருக்காக வேலை செய்வதாயிருந்தால் எவ்விதமாகவாவது ஒப்பேற்றி விடவேண்டுமென்று நினைத்து வேலையை முடிப்பது வழக்கமேயன்றி, அதைத் திருந்தச்செய்ய வேண்டுமென்ற எண்ணம் நம் தேசத் தொழிலாளிகளுக்குக் கிடையாது. வயிற்றுக்குக் கிடைத்தால் பரமார்த்தம் கிடைத்ததுபோல் திருப்தியடைந்து ஜீவிப்பார்கள். திருப்தியடைவது உத்தமகுணமே யென்றாலும் செல்வவிருத்திக்கு ஒத்ததாகாது. சுகமென்றால் வேலையின்றி யிருத்தலென்றே நம்மவரின் எண்ணம். நம் தேசத்தவருள் வேலை செய்ய மனமில்லாத சோம்பேரிகள்; பிச்சை எடுப்பதே தங்கள் தொழிலென்று கூறிக்கொண்டு திரிகிற கூட்டத்தாருமுண்டு. அன்றன்று காலக்ஷேமத்திற்கு போதுமான வேலைகிடைத்தால் போதுமென்று வெளியே புறப்பட்டு அதனால் கிடைக்கும் காசைக்கொண்டு அன்றைப் பிழைப்பை நிறைவேற்றுவது நம் தொழிலாளிகளில் பலருடைய வழக்கம். பெருத்ததும் மேலானதுமான நோக்கமில்லாதவர்களுக்கு உள்ளது போதுமென்று திருப்தியடைவது பொருந்துமேயாயினும் தேச செல்வ விருத்திக்கு அது பெரும் தீமையே.

சுகங்களை நாடுங் குணமும், சிறுபிணிகளை நீக்க முயற்சியும், சுகத்தைக் கொடுக்கும் பொருள்கள் வேண்டுமென்ற ஆசையும், மேன்பட்ட அன்னபானாதிகளும் உடையும், தட்டுமுட்டுகளும் வேண்டுமென்ற விருப்பமும், ஆபரணாதிகளிலும் நேத்திரானந்தத்தைக்கொடுக்கும் பதார்த்தங்களில் இச்சையும், கல்வியில் பிரீதியும் தேசத்திற்கு தேசம் மாறுபடுவதுமல்லாமல், ஒரு தேசத்தில் கூட எப்பொழுதும் ஒரே நிலைமையிலிருக்கு மென்று செல்லக்கூடவில்லை.

T. C. வெங்கடரமணையர்.

—:-:—

## LALITAMBAL.—VI.

### "Thorough!" or "Through and Through!"

### லளிதாம்பாள் சரித்திரம்.

### VI. நல்வழியுபதேசம்: "நாய்வழிகாட்டல்."

"மோனமேன்பது ஞானவரம்பு."

"நாய் நல்லவழி காட்டும், பூனை பொட்டை வழி காட்டும்" என்பது பழமொழி. வழியென்பது நடைபாதை. நடைபாதை யென்றால் நடக்கும் பாதையென்பது ஸ்தூலப் பொருளென்பர். பொருள் ஒன்றே. ஆனால் உபாதி பற்றி ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணமென்று மூவகைத்தாகச் சொல்லப்படும். இம்மூன்றும்

பதார்த்தமே. மரத்துக்கு வேர் மூலம் என்பது போல் பதத்துக்கு தாது மூலம். அடிமரத்திலிருந்து கப்புக்கிளைகளுண்டானதுபோல, பதத்திலிருந்து வாச்சிய முண்டாயிற்று. கப்புக்கிளைகளிலிருந்து பூவும் காயுமுண்டாக மரத்தைத் தன்னுள்வித்தாக அடக்கிக்கொண் டிருக்கும் பழம் உண்டாவதுபோல், வாச்சியார்த்தத்திலிருந்து லக்ஷியார்த்தம் உண்டாயிற்று. இம்மூன்று அர்த்தமும் (பதார்த்தம், வாச்சியார்த்தம், லக்ஷியார்த்தம் என்கிற மூன்றும்) சேர்ந்தது "யதார்த்தம்." அர்த்தபேதம் தேஹத்திரியங்களின் அபிமான பேதத்தால் உண்டானது. உதாரணமாக:—

1. ஸ்தூல தேஹாபிமானி ஜீவன் ஆகையால் அவன் பதார்த்தத்தையே நாடி நிற்பான்.

2. சூக்ஷ்ம சரீரத்துக் கபிமானி ஈசுவரன் ஆகையால் அவன் வாச்சியார்த்தத்தையே நாடி நிற்பன். ஆனதால்தான் ஈசுவரனை "ஸ்தோத்ரப்பிரியன்" என்று சொல்லித் துதிக்கிறது வழக்கமாயிருக்கிறது.

3. காரண சரீரத்துக்கு அபிமானி பரப்ரஹ்மம் ஆகையால் அவன் லக்ஷியார்த்தத்தையேநாடி நிற்பன்.

இந்த லக்ஷியார்த்தம் ஸித்திக்கக் கற்பதே கல்வி. ஆகையால்தான் கற்றோரைக் "கண்ணுடையர்" என்று சொல்வது. மற்றவர்களுக்கெல்லாம் கண்ணில்லையோ என்றால், அது கண்ணல்ல "புண்" என்கிறார் பொய்யா மொழிப்புலவர்.

"கண்ணுடைய ரென்பர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

என்று சொல்லியிருப்பதின் உண்மையிதுவே!

இக்காலத்தில் படிப்பெல்லாம் சோற்றுப் படிப்பாய் முடிந்து விட்டது. மனிதன் தன்னை வயிறுவளர்க்கப் பிறந்தவனாக நினைக்கிறான். "உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே" என்ற திருமூல தேவர் வாக்கு இக்காலத்தவருக்குப் பொருந்தாது. "உடம்பை வளர்த்தேன் ஊன் வளர்த்தேனே" என்று நமன் வந்தழைக்கும்போது நாதியற்றுப் புலம்புவர்.

"இந்துக்கள் பூர்வந் தொட்டு, படிப்பை வித்யாரம்பமென்று விஜயதசமியன்று ஐந்து வயதிலேயே ஆரம்பித்து குழந்தைக்கு "ஹரி: ஓம்" என்று லக்ஷியப்பொருளாம் "வித்தில்லா மாம்பழத்தை" க்கொடுத்து, "ஆதியநாதி அகாரணகாரணி"யாக வுள்ள அஷ்டாக்ஷரப் பொருள் ஸித்திப்பதே படிப்பின் பயனாமென்ன, வித்யாரம்பம் செய்யுங் குழந்தைக்கு "ஹரி:-ஓம்-நமோ-நா-ரா-ய-ணா-ய-ஸித்தம்" என்று அழியாதவித்தையாம் அக்ஷராப்பியாஸம் செய்துவைப்பர். ப்ரஹ்லாதன் இதையே கடைப்பிடியாகக் கொண்டு அதன் லக்ஷியார்த்தத்தை நாரதருடைய உபதேசபலத்தால் உள்ளபடி உண்மையாய் கிரஹித்துக்கொண்டு தனது பள்ளிப்பிள்ளைகளுக்கெல்லாம் "ஓம் நமோ நாராயணாய" என்கிற அஷ்டைசுவரியக் களஞ்சியத்தின் கருப்பொருளை கருணைமிகுதியால் வாரி வாரி வழங்கினான். ஆகையால் "ஹரி: ஓம்" என்று ஆரம்பித்த வித்யையின் லக்ஷியார்த்தம் ஸித்திப்பதே வித்யாப்பியாஸத்தின் நோக்கமும் முடிவுமாம். ஆகையால் வழியென்பது "ஹரி:" முதல் "ஸித்தம்' வரையில், அதாவது, "அடி துவக்கி முடிவரையில்" உள்ள உண்மையான உளவு மார்க்கத்தைக் குறிக்கும். இந்த உளவுமார்க்கம் "யோக மார்க்கம்" என்றும் சொல்லப்படும்.

"அடிதுவக்கிமுடிவரையிலாறுமாநிலங்கடந்து
அப்புறத்தில்வெளிகடந்தஆதியெங்கள்சோதியை
யுடபதிக்கண் அமுதருந்தியுண்மைஞானஉவகையுள்
உச்சிபட்டிறங்குகின்றயோகிநல்லயோகியே."

என்று இந்த உளவுமார்க்கமறிந்து வழிநடந்து திரும்பியவர்களான மஹான்கள் சொல்லியிருக்கிறார்கள்.

"வழி" யென்பதற்கு "நடைபாதை" யென்று பதார்த்தம் சொல்லிவிட்டு "உளவுமார்க்கம்" என்று சொல்லும் யோகமார்க்கமே அதனால் குறிக்கப்பட்டது என்று சொன்னால் அது எப்படி நம்பத்தக்கது? என்று பல்லோரும் கேட்கலாம். நமது சிஷ்ய மாணிக்கமான "தீர்த்தம் பஞ்சநத சாஸ்திரிகளும்" ஆதியில் இப்படித்தான் மயங்கினார். இவர் மயக்கமறிந்து 'வாயால் சொன்னால் வழுவிவிடும்" என்று மோன குருமூர்த்தியாய் அவதரித்த ஸ்ரீநாராயணகுரு ஸ்வாமியவர்கள் அவருக்கு மௌனதீக்ஷை கொடுத்து அந்த தீக்ஷையின் முடிவில் "நாகமாணிக்கம்" என்று சொல்லும் வாழும்பாம்பின் சிரோபூஷணமான "நாகரத்னத்தை"க் கொடுத்துப் பூஜிக்கச் சொன்னார்.

"பாம்புக்குப் பாலை கொடுத்தாலும் அது விஷத்தையே கொடுக்கும்" என்பது உலகத்தார் சொல்லும் பழமொழி. இதுதான் எழுத்தறியாது "எழுத்தறு கத்திபாம் கல்விப்பழக்கம்" பெற்றவர் காணும் பேதஞானம். அந்த விஷம் தானே பின்னும் உருண்டு திரண்டு ஒளிதிகழ் மாணிக்கமாமென்பதை யறியார் பேதஞானமுள்ளவர்கள். நாகரத்னத்துக்குப் பாம்பின் விஷத்தை யெடுக்கும் குணமுண்டு என்பதை அவர்கள் அறியார். பதார்த்தமட்டும் பார்ப்பர் புலனறிவாளர். வாச்சியார்த்தத்தையு முணர்வார் விஞ்ஞான சித்தர்கள். லக்ஷியார்த்தத்தை யுணர்வார் ப்ரஜ்ஞான புருஷர்கள். ஆகையால் பாம்புக்குக் கொடுத்த பால் விஷமானாலும் அந்த விஷமே நிச்சலப்பட்டு நிற்கில் நாகரத்னமாகு மென்பதை யறிந்தவர் "முழுதும் வழியறிந்து முழுவழியுந்தான் நடந்த தீரர்கள்." அதேமாதிரியாக வழியென்றால் 'நடைபாதை" யென்பது பதார்த்தம். "பிராணன் இயங்கும் (நடக்கும்) பாதை" யென்பது வாச்சியார்த்தம். பிராணன் நடக்கும் பாதையை "நாடி" யென்பர். இதையே இக்காலத்து மேற்றிசைச் சாஸ்திர விற்பன்னர் "Conduction path" என்று சொல்லக் கற்றிருக்கிறார்கள்.

"நாடிகளூடுபோய்ப் புக்க நலஞ்சுடர்தான்
வீடு தருமாம் விரைந்து."—என்பதை

யுளவறிந் துணர்ந்து, அந்த உளவு வழியில் நடக்கத் துணிந்து,

"நாடிவழக்க மறிந்து செறிந் தடங்கி
நீடொளி காண்ப தறிவு."—என்றபடி

நாடிவழிபற்றி நடந்து அறிவு என்னும் வழி முடிவுக்கு வந்தவர் லக்ஷியார்த்தம் கண்ட "உளவறிவாளர்" என்னப்படுவர்.

"உளவறிவாளர்" என்றாலும் "யோகி" யென்றாலும் ஒன்றே.

'முற்றும் வழியறிந்து முழுவழியுந் தான் நடத்தல் ஒருவழி. இதுதான் "நல்வழி." நாய் போகு மார்க்க மெல்லாம் திருக்கு மூத்திரம் விட்டுக்கொண்டுபோய் பிறகு அந்த வாசனை மோப்பத்தால் போனவழி கண்டறிந்து மீளவும் திரும்பக்கூடுமான சக்தியுடைய தாகையால் இந்தவழியை "நாய்மார்க்கம்' என்றும் "நல்லவழி" யென்றும் சொல்வது பெரியோர் வழக்கம். இதற்கு "மர்க்கட சுபாவம்" வேண்டும். அதாவது கொடுத்ததோர் குறியைக் குரங்குப் பிடிபாய்ப் பிடித்துக்கொள்ளும் ஸம்யம சக்திவேண்டும். குரங்குக்குட்டி தாயின் வயிற்றைக் கட்டிக்கொள்வது போல ஆனந்தத்தாயாம் அறிவுதன்னை விடாது பிடித்தற்பிடி "மர்க்கட சுபாவம்" என்னப்படும். இந்த அறிவு ஒன்றைமட்டும் விடாது பற்றிநின்றால், அது கொண்டு "நாடி வழக்கமறிந்து" பின்னர் "செறிந்தடங்கி"—அந்த நாடிகள் நிறைந்த பூரக நிலையில் பொருந்தி யிருந்து அதுவே கேவல கும்பகமான 'நிச்சலநிலையில்' "சலிப்பற நின்று" "ஆதியனாதி" யாகவும் "அகாரணகாரணி" யாகவும், "சோதியசோதி" யாகவும், "சுகபர

சுந்தரி" யாகவும், "மாது" என்னும் ஸ்ரீசப்த மாத்ர மாகவும், "சமாதி" யென்று சொல்லும் "ததேவார்த்தமாத்ர நிர்ப்பாஸமாக" ஸ்வரூப சூந்யத்தில் விளங்கும் அரூபாத்மக அபின்ன சக்தியாகவும், "மனோன்மனி"யாகவும், (மன மிறந்த உன்மனுவஸ்தை யாகவும்) "மங்கலி" யென்னும் சிவசக்தியைக்கிய ஸ்வரூபமாகவும், இப்படி ஆதிமுதல் அந்தம்வரையில் அடிமுடி நடு வென்னும் பேதமின்றி ஓரே ஸ்வயம்பிர காசமாக விளங்குவதால் "நீடொளி" யென்று சொல்லப்பட்ட நித்தமுத்த சுத்தப்பொருளாம் ஸ்வயம்பிரகாச லக்ஷியத்தை சாக்ஷாத்கார தரி சனமாகக் "காண்பது" (அதாவது அபரோ க்ஷானுபூதியாக அறிவது) ஆகிய "அறிவு"என் னும் அத்வைதஞானப் பழம்பொருளை அனுபவ ரீதியாக அறியாமலறிந்து அறிவுமயமாகலாம். இப்படி அறிவு மயமானபின் "போனவழி தா னறிந்து மீளவும் திரும்பக்" கற்றுக்கொள்ள லாம். இதுதான்"நாய்வழி"யென்று சொல்வது. தர்மராஜனைப் பற்றிச்சென்ற நாய் மற்றவரெல் லாம் வழியில் விழுந்துபோக மர்க்கட சுபா வம் பற்றித் தான்மட்டும் தர்மராஜனைப் பற் றித் தொடர்ந்ததால் கடைசியில் ஸ்வர்க்க ஸாம் ராஜ்யம் பெற்று பின்னும் தர்மராஜாவைக் காக்கவென்று அறிவுருக்கொண்டு நரகஞ் செ ன்று அவரையும் ரக்ஷித்தது. ஒருசித்தன் சிவ னைப்பார்த்து "ஸ்வாமி! நீர்போனவழி யெல் லாம் அடியேன் நாய்போல் கூடவர அனுக்கிர கிக்க வேண்டு"மென்றான். "சரி" அப்படியே ஆகுக!வென்று அனுக்ரகித்தார். "சித்தன் போக்கு சிவன் போக்கு"என்று சொல்லிக்கொ ண்டே அவன்சிவன் போனவழியெல்லாம் கூட வே சுற்றித்திரிந்தான். சிவனும் ஆடிப்பலுத்து அம்பலத்தமர்ந்தார். சித்தன் பகவானைத் தரிசி த்துப்பின்னும் ஒரு வரன்கொடுத்து இந்த நாய்க்கு அனுக்ரகம் செய்ய வேண்டுமென்றான். "என்ன?" என்று கேட்டார் பகவான்.

"நான் முன்னேபோக பகவான் நாய்போல் கூடவே வரவேண்டும்!" என்றான்!

"என்னடா அது! இவன் விடுகிற வழியாக வில்லையே!" என்றுன்னி பகவான் "அப் படியே ஆகுக!" என்றனுக்ரகித்தார்.

சித்தன் உடனே பகவான் ஆடி யமர்ந்த வெள்ளியம்பலம் விட்டுப் புறப்பட்டு ஜகத் ரக்ஷணார்த்தம், தான் சிவனைப்பற்றிப் போன வழியெல்லாம் திரும்பிநடந்தான். பகவானும் கூடவே வந்தார்! ஆதலால் தான் அவருக்கு "அன்பின் வலையில் பட்டோன்" என்கிற திரு நாமம் வந்தது.

இப்படியாக நாய்வழி போனவர் சுயநலம் பாரார்; பரநலம்(பரோபகாரம்)ஒன்றையே கரு துவார். இப்படி பரநலம் கருதும் கருத்தே கருணையென்பது. நாயினிடத்தில் இது நன்றி யறிவாக விளங்குகிறது.

இப்படியாக "நாய்வழி" யென்பதை வாய் திறக்காமல் தானே குருவானவர் சிஷ்யனகத் திற்புகுந்து மௌனோபதேசஞ்செய்து மனமற விளக்கினார். இந்த ரசவிபத்தை புணர்ந்த ஔவைப் பிராட்டியார் "மோனமென்பது ஞானவரம்பு" என்று சுட்டிச் சொல்லி சும்மா விருந்தார். ஓம்தத்ஸத்.

---

## Sita-Manonmani.

## சீதா-மனோன்மணி.

**Our King Emperor.**

(Special for the Viveka Chintamani)

நம் சக்கிரவர்த்தி.

---

சீதா:—மனோன்மணி! நமது மெத்தையின் மேல் நிசாகரன் தனது இன்பம்தரும் கிரணங் களால் வெள்ளித் தகடுபோன்ற ஜியோத்ஸனை யை பரவச் செய்திருக்கிறான். தென்றலும் மிக இன்பமாக உத்தியான வனத்திலுள்ள சம் பங்கி, மல்லிகை, முல்லை, பவழமல்லிகை, பன் னீர் முதலான புஷ்பங்களின் வாசனைகளை வஹி த்து வீசிக்கொண் டிருக்கிறது. இத்தகைய வமைய்த்தில், நாம் ஆங்கு சென்று, உட்கார்

ந்து, வழக்கமான நமது சம்பாஷணையின் இன்பத்தை அனுபவிக்காவிடில் அதிர்ஷ்ட ஹீனர்களே.

மனோன்மணி:—நாம் இப்பொழுது அவ்வாறு செய்ய என்ன அப்பியந்தரம் உளது? நான் சற்றுநேரத்திற்கு முன்பு மேலே சென்றபொழுது, கருணாலயம் சோபா இரண்டை வெளியே எடுத்துப் போட்டிருப்பதைப் பார்த்தேன். வருவாயாகில், சென்று, சற்று நேரம், இன்பமாய்க் காற்று வாங்கிக்கொண்டு பேசிக்கொண்டிருப்போம்.

சீதா:—சரியென்று கூறி, தன்கையில் வைத்திருந்த சமாசாரப் பத்திரிகையுடன், மேலே செல்ல இருவரும் சோபாக்களில் உட்கார்ந்தார்கள்.

மனோன்மணி:—கடைசியாக சமாசாரப் பத்திரிகையில் நீ படித்தது எது?

சீதா:—டிசம்பர் மாதத்தில் டெல்லியில் நடக்கப்போகும் மாக்ஷிமை பொருந்திய நம் சக்கிரவர்த்தி சக்கிரவர்த்தினிகளின், கிரீடாபிஷேக மஹோத்ஸவ வைபவத்திற்காகச் செய்யப்பட்டு வரும் ஏற்பாடுகளைப் பற்றி.

மனோன்மணி:—ஆஹா! ஏற்பாடுகளைப் பற்றி நாம் பத்திரிகைகளிலும், வைபவங்களைப்பற்றி டிசம்பர் மாதத்தில தந்தி சமாசாரங்களிலும் நின்று தெரிந்து கொள்ளல் கூடும். ஆனால், நமது கிட்டற்கரிய ராஜ தம்பதிகளைப் பற்றிக் கிஞ்சித்து தெரிந்துகொள்ளல், தற்காலம் நமக்கு அளவற்ற இன்பத்தைத் தரும் ஆக்ஷேபணையில்லை. ஆனால் எங்ஙனம் அதைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்! நாம் நினைத்தபோதெல்லாமா நம் உபாத்தினி அம்மணி பக்கத்தில் இருந்து, நமதெண்ணங்களைப் பூர்த்தி செய்து கொடுத்தல் முடியும்?

சீதா:—அண்ட சிருஷ்டிக்கே காரணம், ஈசுவரனது அன்பென்று கூறப்பட்டுளது. ஆதலின், அன்பு ஸ்வரூபியாகிய பகவான், சிரத்தையுடன் ஏதாவதொரு விஷயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள முயன்றால், தெரிவிக்கிறார் என்பதற்கு எனது தற்கால அனுபவமே சாக்ஷி! ஏனெனில், நேற்றுத்தான் நான் ஒரு புத்தகத்தில் நமது சக்கிரவர்த்தியின் சரித்திரச் சுருக்கத்தை அதிக இன்பத்துடன் படித்தேன். நீயும் அதே விஷயத்தை சிரத்தையாய்க் கேட்கப் பிரியப்பட்டாய்! ஆதலின் ஈசுவரப் பிரசாதம் சிரத்தா பக்தியுள்ளவர்களுக்குக் கிட்டும் என்பது பிரத்தியக்ஷப் பிரமாணம்.

மனோன்மணி:—டிசம்பர் மாதத்தில் டல்லியில் மகுடம் சூட்டிக்கொள்ள வரும் சக்கிரவர்த்தியினது திருநாமம் யாதோ தெரிந்து கொள்ளப் பிரியமுள்ளவளாயிருக்கிறேன். அவர்களது மனைவியின் நாமதேயத்தையும் கூடித்தெரிவி கேட்கிறேன்.

சீதா:—நமது சக்கிரவர்த்தியின் நாமதேயம் ஐந்தாவது ஜியார்ஜ். நமதரசியாகிய அவரது மனைவியின் பெயர் விக்டோரியா மேரி டெக் மாகாண அதிபதியின் மகள்.

மனோன்மணி:—காலம் சென்ற மாக்ஷிமை பொருந்திய ஏழாவது எட்வர்டு சக்கிரவர்த்தி, அவரது அன்புள்ள மனைவி அலெக்ஸாண்டிரா, இவர்களின் முதல் புதல்வராமோ இவர்?

சீதா:—அல்ல! அல்ல! எப்பொழுதும் ஆங்கில தேசத்தரசரது முதல் புதல்வர், வேல்ஸ் தேசச் சிற்றரசர் என்ற பட்டம் பெற்றவர். ஏழாவது எட்வர்டுக்கு ஆல்பெர்டு விக்டர் என்ற பேருடன் கூடிய மூத்தமகனிருந்தார். அவர் உயிருடனிருந்திருந்தால் நமது சக்கிரவர்த்திக்குப் பட்டம் கிடைத்திராது. அவர் நல்ல வாலிபப் பருவத்தில் காலம்சென்று விட்டதால், இவர் முதலில் வேல்ஸ் சிற்றரசராகி பிறகு எட்வர்டு காலம்சென்றதும் ஆங்கில ராஜ்ஜியபாரம் வஹித்தார். எப்பொழுதும் இந்தியாவின் மேலும் இந்துக்கள் முதலான இந்தியகுடிகள் மீதும் மிக்க பாசமும் கருணையுமுள்

ளவராதலால், இது காறும் இந்தியாவில் நடைபெற்றிராத இந்தியாவில் தானே நேராக வீற்றிருந்து மகுடஞ்சூட்டிக் கொள்வது தனது பிரியம் என்று தெரிவித்ததும், இந்தியாவிலுள்ள குடிகள் மேஹத்தைக் கண்ட மயில்கள் போல ஆனந்தங் கொண்டு, அன்பு, ராஜபக்தி என்னும் கலாபங்களை விரித்தாடி ஆரவாரம் செய்தலும் ஆச்சரியமோ!

மனோன்மணி:—ஆஹா! இவரது பாலிப விருத்தாந்தங்கள் யாதேனும் தெரிந்திருந்தால் தெரிவி கேட்கிறேன். இவர் எங்ஙனம் வித்யாப்பியாசத்தைச்செய்தார்? எங்ஙனம் ராஜநீதி முதலியனவைகளைக் கற்றார்? என்பதைத்தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

சீதா:—இவர் 12-வயதுள்ள வராயிருந்த பொழுது, கப்பல் ராணுவ உத்தியோகப் பயிற்சிபெற "பிரிட்டானியா" என்னும் கப்பலிற் சென்றிருந்து, முதல் முதல் ஓர் சாதாரண மானுமியாகவிருந்து பழகி பிறகு 1893-ம் வருஷத்தில் காப்டின் பட்டம் பெற்றார். இப்பவும் அவரை நமது மாலுமி அரசர் என்று எல்லோரும் புகழ்ந்து கூப்பிடுவதும் உண்டு.

மனோன்மணி:—பிரிட்டானியா 'கப்பல் என்பது எது? விரித்துரைக்கக் கேட்கப் பிரியமுள்ளவளா யிருக்கிறேன்

சீதா:—கப்பல் போர் ராணுவவீரர்களையும், உத்தியோகஸ்தர்களையும் பழக்குவதற்காக ஏற்ப்பட்டிருக்கும் ஓர் பெரிய போர் கப்பல் அது, என்று கேள்வி யுற்றிருக்கிறேன்.

மனோன்மணி:—அவரது கலியாண மஹோத்ஸவம் எப்பொழுது முடிந்ததாமோ?

சீதா:—அவர் 28-வது வாலிபப்பருவத்திலிருந்த பொழுது. டெக் மாகாணத்திய அரசகுமாரியாகிய விக்டோரியா மேரி என்னும் மாது சிரோமணியை மணம் செய்து கொண்டார்.

மனோன்மணி:—இத்தம்பதிகளுக்கு எவ்வளவு குழந்தைகள்?

சீதா:—இவர்களுக்கு ஐந்து ஆண் குழந்தைகளும் ஓர் பெண் குழந்தையும் உள. இவர்களுள் மூத்தவர் எட்வர்ட் ஆல்பெர்ட என்னும் நாமம் வாய்ந்த அரசகுமாரர். 1891-ம் வருஷத்தில் பிறந்தார். அவர் தாம் தற்காலத்திய வேல்ஸ் இளவரசர்.

மனோன்மணி:—நமது சக்கிரவர்த்தி பூமி யாத்திரை செய்திருக்கிறாரமோ?

சீதா:—ஆஹா! இவரைப்போல் உலகம் முழுதும் சுற்றி அவ்வளவு இடங்களைப் பார்த்திருக்கும் அரசர்கள் கிடையா. 1877-ம் வருஷத்தில், இவரும், இவரது சஹோதரருமாக, இரண்டு வருஷம் சமுத்திர யாத்திரைசெய்து உலகமுழுதும் சுற்றிவந்தார்கள். பிரிட்டிஷ் ஆதீன பிராந்தியங்களிலும் கூட, இவர்கள் பார்த்திருக்கும் அளவு, மற்ற அரசர்கள் பார்த்ததில்லை.

மனோன்மணி:—அப்படியா! நீ இப்பொழுது கூறிய யாத்திரையைத் தவிர, வேறு, எங்ஙனம், எப்பொழுது செய்திருக்கிறாரமோ?

சீதா:—சொல்கிறேன் கேள். அவரது தாயார் விக்டோரியா சக்கிரவர்த்தினி காலஞ்சென்று, அவர், யார்க் மாகாண அதிபதி பட்டத்திலிருந்த பொழுதே, 'ஒபீர்' என்னும் பெயர் வாய்ந்த கப்பலேறிச் சென்று, ஆஸ்திரேலியாவில் தங்கி, அங்கு ராஜாங்க சபையை ஆரம்பம் செய்து விட்டு, "நியூ ஸீலண்டு" தேசமென்ன, தென் ஆப்பிரிக்கா வென்ன, கனடா தேசமென்ன, "நியூ பவுண்டுலண்டு" என்ன, இப்பேர்ப்பட்ட இடங்களிலெல்லாம் தங்கிவிட்டுத் திரும்பினார் என்று சொல்லக் கேள்வியுற்றிருக்கிறேன்.

மனோன்மணி:—நமது சக்கிரவர்த்தியும், சக்கிரவர்த்தினியும் இதற்கு முன் எப்பொழுதாகி

னும் நம் இந்தியாவிற்கு வந்திருக்கிறார்களா மோ?

சீதா:—ஆஹா! 1905 வருஷத்தில், இவர்கள், வேல்ஸ் சிற்றரசரும், சிற்றரசியு மாயிருந்த பொழுது, இந்தியாவில் விஜயம் செய்து பம்பாயில் வந்திறங்கினார்கள். இறங்கின து மன்னியில், நீடித்த காலம் தங்கியும் நின்றார்கள்.

மனோன்மணி:—நீடித்த காலமென்றால் எவ்வளவு காலமிருக்கலாம்?

சீதா:—சுமார் ஐந்தாறு மாதங்களிருக்கலாம். மற்ற இடங்களிலிருந்ததைக்காட்டிலும் அதிக காலம் இங்கு தங்கினதினின்று நீடித்த காலமெனக் கூறினேன்.

மனோன்மணி:—சரிதான்! அவர்கள் இங்கு தங்கின பொழுது, தனக்கு இந்திய பிரஜைகளிடத்துள்ள அன்பைக் காட்டினதுண்டாமோ!

சீதா:—ஆஹா! ராஜதம்பதிக ளிருவரும், சென்ற விடங்களிலெல்லாம், எவ்வித பிரஜைகளிடத்தும், மிக்க அன்பையும் ஆதரவையும் காட்டினார்கள். பிரஜைகளும், ராஜபக்தியுடன், மனப்பூர்த்தியான நல்வரவை அவர்களுக் களித்தார்கள்.

மனோன்மணி:—அவர்கள் இந்தியாவி னின்று, நேரே, தங்கள் தேசம் சென்றார்க ளாமோ?

சீதா:—இல்லை! நேரே தங்கள் தேசம் போகாமல், ஆப்பிரிக்காவிலுள்ள ஈஜீப்து தேயத்தில் தங்கி அத்தேசத்தியரசனாகிய, "கெடிவ் என்" னும், பிரபுவைப் பார்த்துவிட்டு, தங்களூர் சென்றார்கள்.

மனோன்மணி:—இந்தியாவினின்று திரும்பிச் சென்றபிறகு மறுபடி அவர்கள் தேசயாத்திரை இதுகாறும் செய்யவில்லை போலும்

சீதா:—அப்படிக்கு இல்லை! அப்படிக்கு இல்லை! 1908-ம் வருஷத்தில், நம் ஜியார்ஜு சக்கிரவர்த்தி, மறுபடி கனடா தேசத்திற்குச் சென்றார். மறுபடி 1910-ம் வருஷத்தில் தென் ஆப்பிரிக்காவில் பார்லிமெண்டு யூனியன் என்னும் ராஜாங்க சங்கத்தை முதல்முதல் கூட்டச் செல்லத் தயாரா யிருந்தவர், ஏழாவது எட்வர்டாகிய தனது தந்தை காலஞ்சென்றதால் நின்றுவிட நேர்ந்து, அவருக்குப் பதில், அவரது சிற்றப்பாராகிய "கன்னாட்டு ட்யூக்" அனுப்பப்பட்டார்.

மனோன்மணி:—இவர் எப்பொழுது ஆங்கில தேசத்து ராஜாவாகவும், நம் சக்கிரவர்த்தியாகவும் ஆனது?

சீதா:—தனது தந்தை இறந்துபோன 1910-ம் வருஷம், மேமாதம் 6-ந்தேதி அன்றுதான்.

மனோன்மணி:—சரிதான்! இவரை ஐந்தாவது ஜியார்ஜு என்று கூறுவது எதனால்! அது எதைக் குறிக்கிறது?

சீதா:—இவர்க்கு முன் ஜியார்ஜு என்று நாமதேயம் பெற்றிருந்த நான்கு அரசர்கள் இங்கிலாந்தில் அரசாண்டிருந்ததால், அவர்களிலிருந்து இவரைப் பகுத்தறிய சரித்திரங்களில் அவ்வாறு கூறியுளது இங்கு 'ஐந்து' என்பது குறிப்பதெல்லாங் கூடி, ஆங்கில தேசத்தில், இவர்க்கு முன், இவரது நாமதேயத்துடன் கூடிய அரசர்கள் நான்குபேர்கள் அரசாண்டிருக்கிறார்கள் என்பதே.

மனோன்மணி:—நம் தற்காலத்திய சக்கிரவர்த்தி போல், இவரது தகப்பனாரும், பாட்டியாரும் கூட இந்தியாவின் மேலும், இந்திய குடிகள் மீதும், பற்றுள்ளவர்களா யிருந்தார்களாமோ?

சீதா:—ஆஹா! கிஞ்சித்தேனும் தடை அன்னியில் விக்டோரியா சக்கிரவர்த்தினி அம்மணி, நல்லரசி யென்று அன்புப் பேரிட்டு அழைக்கப்பட்டது மன்னியில், அவர்களுக்கு இந்தியாவின் மீதிருந்த வாஞ்சையினால், ஓர் இந்து கனவானை தனக்கு உருடு பாஷைகற்பிக்க ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்களது முதல் புதல்வர் எட்வர்டு சக்கிரவர்த்திக்கு இந்தியாவின் மீதும் இந்திய பிரஜைகள் மீதுமிருந்த பற்றினால் தான், தனது அருமைப் புதல்வர் வேல்ஸ் சிற்றரசரையும், தனது மருமகளாகிய, அவரது மனைவி வேல்ஸ் சிற்றரசியையும், இந்தியாவுக்குப் போய், அத்தேசத்தையும், ஆங்குள்ளகுடிகளையும் பற்றித் தெரிந்து அதையும், அக்குடிகளையும் நேசிக்கும்நிமித்தம், அனுப்பினார். அவர்களும் அப்பொழுது வந்த பொழுது மாத்திரமேயன்றி, இதுகாறும் நானாவிதமாய், தங்களுக்குள்ள பற்று, தங்க

ளது தந்தை, பாட்டியார்களுக் கிருந்ததை விட கிஞ்சித்தாகிலும், குறைவுள்ளதல்லவென்று காட்டி யிருக்கிறார்கள்.

மனோன்மணி:—ஆஹா! அப்படியா! இவ் விஷயங்களைக் கேட்டு மிக்க சந்தஷ்டி அடைந்தேன். இந்த நமது ராஜ தம்பதிகள் போன்ற சக்கிரவர்த்தி, சக்கிரவர்த்தினிகள், இந்தியாவிற்கும், இங்கிலாண்டு தேயத்திற்கும் கிட்டற்கரியதாகலால், நாம் அவ்விருவர்களுக்கும் தீர்க்காயுளைக் கொடுக்குமாறு கடவுளைப் பிரார்த்தித்துச் செல்வோமா?

சீதா:—அங்ஙனமே செல்வோமென்று கூறி வாழி, வாழி நமது சக்கிரவர்த்தியும், சக்கிரவர்த்தினியும், நீடூழிவாழ்க பல்லாண்டு வாழ்கவென்று, ஆசிகூறி கடவுளைப் பிரார்த்தித்து, அவர்களது, நற்குணங்களைத் துதித்துச் சென்றார்கள். ஓம்தத்ஸத்.

உ

ஸ்ரீ லலிதாம்பாயைநம:

சென்னை விவேகசிந்தாமணிப் பத்திராதிபர்

மகா-ா-ா-ஸ்ரீ

C. V. சாமிநாதையர் சந்ததி

நீடூம்வாழ்கவென்ற

நடுவெழுத்தலங்கார

இருச்சொல்லுவமை விடைப்பொருளும்

அப்பொருளின்

ஆதியந்த அக்ஷரங்களினின்றவதரித்த

63. அவதானப்பொருளும்

உடைய

வித்தியாவினோத

விடுகதை வினவிடை.

நொண்டிச்சிந்து.

தெந்தினத்தின தினனு-தினன தின
தெந்தினத்தின தின தின தின னு-தெ

1 மாவளர்கோயிற்பூசை—செய்வோன்பேரொன்று
வளர்கூட்டப்பெயரொன்றுநாடொன்று
பாவளர்சுபாவப்பெய—ரொன்றுகின்னரன்
பரியாயப்பேரொன்றுசேனைப்பேரொன்று
பூவளர்போதனைப்பேரொன்று—யானைப்பே
[ரொன்று
புண்யகட்டளைப்பேரொன்றுபூமிப்பேரொன்று
கோவளர்நன்னீதிப்பேர்—தனிலொன்று
குருப்பேரொன்றுவேலேவர்கோன்பேரொன்று
(தெந்தி)

2 வாசனைப்பண்டமொன்று—ஒடுக்கமென
வழங்கும்பேரொன்றுபட்டணப்பேரொன்று
நேசமுடன்சொல்வதற்கு—திரியாக்ஷரம்
நிகழ்த்துமிப்பொருள்முற்றுந்தானறிந்து
மோசமின்றிநடுவில்வரும்பீஜாக்ஷரத்தை
முற்றுமெடுத்துவரிசைக்ரமமெழுதி
சூசனையுடன்பார்க்க—"சாமிநாதையர்"
தூய"சந்ததிநீடூம்வாழ்க"வென்றேகூறும். (தெந்தி)

இருச்சொல்லுவமை விடைப்பொருளின்
ஆதியந்த
அக்ஷரப்பொருளின் வினு.

3 சொன்னயமிகுஞ்சோடச—பதங்கள்தனில்
தொக்கினின்றவாதியந்தவக்ஷரங்களாற்
பன்னகபூஷணன்பேரொன்று—சிவைபே
[ரொன்று
பங்கமிலாச்செல்வத்தின்பெயரொன்று
வண்ண(பே—மை)யென்பதொன்று—மன்னன்
[பேரொன்று
வணக்கத்தின்பெயரொன்றுமகள்பேரொன்று
சன்னதத்துவப்பேரொன்று—விடாமழைப்பேர்
தனிலொன்றுகாந்தியின்பெயரொன்று (தெந்தி)

4 சுருதியின்பெயரொன்று—பொறுமையெனச்
சொல்லும்பெயரொன்றுதீர்க்கதர்சியொன்று
மருவில்லாநான்கின்பெயர்—தன்னிலொன்று
வல்லதரம்புப்பேரொன்றுமிருகமொன்று
திருவளர்புவிமீது—இரண்டெழுத்தாய்த்
திரியுமப்பொருளினின்றவதரித்த
பொருளறுபத்துமூன்றும்—இதனடியிற்
புனிதமுடனேயான்புகலுகிறேன். (தெந்தி)

இருச்சொல்லுவமை விடைப்பொருளின்
ஆதியந்த அக்ஷரங்களினின்றவதரித்த
63 அவதானப்பொருள்களின் வினு.

5 மாதவபிரகஸ்பதி—மகன்பேரொன்று
வளர்மோக்ஷப்பெயரொன்றுபுல்லொன்று
தாதவிழுமஷ்டமா—சித்தியிலொன்று
சாலிவாகனன்பெயர்தன்னிலொன்று
பூதலத்திற்சீக்கிரப்பே—ரதனிலொன்று
புண்யதர்க்கைபேரொன்றுபுலவர்பேரொன்று
வேதன்புத்திரனென்று—சரசப்பெயர்
விள்ளுபொருளொன்றுசுகப்ரம்மாபேரொன்று
(தெந்தி)

6 நன்மதிப்பெயரொன்று—இனிமைப்பெயர்
நண்ணுபொருளொன்றுகுளப்பெயரொன்று
தன்மமுடிப்பெயரொன்று—வஞ்சப்பேரொன்று
தாரணியில்நற்பசுவின்பெயரொன்று
பொன்மயநன்னுடொன்று—தீர்த்தத்திலொன்று
போக்குவரவுக்குரியதெருப்பேரொன்று
சன்மசகோதரிபேரொன்று—கடவுள்பெயர்
தன்னிலொன்றமுதத்தின்பெயரொன்று. (தெ)
7 வேதசந்தஸூப்பேரொன்று—ஏகாந்தப்பேர்
விள்ளுபொருளொன்றுசிநேகப்பேரொன்று
போதஞானிபெயரொன்று—கர்தகப்பேர்
பொருளொன்றுயமுனையாற்றின்பேரொன்று
மாதவகாசிபன்மனைவி—யொன்றுமூன்றின்பேர்
வழங்கும்பொருளொன்றுசாமையொன்று
பூதலத்திற்பிரீதியின்பேர்—தன்னிலொன்று
புண்ணியவாராதனைப்பெயரொன்று. (தெந்தி)
8 வனப்பூண்டின்பெயரொன்று—வளரும்பெண்தே
வதைபெயரொன்றுமகன்பெயரொன்று
கனமிகும்மஹத்துவப்பே—ரதனிலொன்று
காசினியிலாண்மகன்பெயரொன்று [ரொன்று
தனப்பெண்ணின்பெயரொன்று—பூனைப்பே
தருமவான்கடையேழுவள்ளலொன்று
தினமொளிர்மூக்குத்தி—யதனிலொன்று
திவ்வியபறவைப்பெண்பெயரொன்று (தெந்தி)
9 சடற்பெயரொன்றுதருமங்—கொடைப்பே
காரணபள்ளிவாசற்பெயரொன்று [ரொன்று
புடவியிற்றமயன்மனை—வியின்பேரொன்று
புண்யசந்த்ரன்பேரொன்றகப்பேரொன்று
திடமிருசினியின்பே—ரொன்றுதாய்பெயர்
செப்புபொருளொன்றுதாயைப்பெற்றோன்பே
[ரொன்று
படர்விதப்பெயரொன்று—விருப்பப்பெயர்
பதமொன்றுமானமுடையோன்பேரொன்று
(தெந்தி)
10 கானகமிருகமொன்று—முனிவனென்று
கதிரொப்படிசெய்நெற்களப்பெயரொன்று
தீனமில்லாவறிவின்பெயரிலொன்று
திட்டத்தின்பெயரொன்றுவேதமுணர்ந்த
வானவன்குலத்துதித்தோன்—பெயரிலொன்று
வரையறுத்துக்கூறுமிப்பொருள்தெரிந்து
ஞானிலமும்புகழ்படைத்த—செந்தமிழ்க்கவி
நாவலரேவிடைசொல்லுவீரே. (தெந்தி)

(இன்னும்வரும்)

———:-:———

## The Late Sister Nivedita.

## ஸ்ரீ நிவேதிதை யம்மாள்.

—(:-:)—

மிஸ் மார்கரெட் நோபிள் என்னும் பேர் புனைந்த ஆங்கிலேய மாது ஸ்ரீ-விவேகாநந்த ஸ்வாமிகளுக்குச் சிஷ்யையாகி ஸ்ரீ-நிவேதிதை யம்மாள் என்னும் தீக்ஷாநாமம் பெற்று அப்படியே இந்த பரதக்கண்டத்தை மாத்ருக்ஷேத்ரமாகக் கொண்டு இந்தியாவுக்குத் தன்னை அர்ப்பணம் செய்துழைத்து வந்தது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. அந்த அம்மாள் மாது ஸ்ரீ அன்னி பெஸண்ட் அம்மையாரைவிட இந்தியாவையும் இந்தியர்களுடைய ஜாதிமத ஆசார ஒழுக்கங்களையும் உளக்கண்ணால் அறிந்து களங்கமற்ற தன்மனதில் பட்டதை உள்ளதுள்ளபடி உண்மைக்கேயொப்பிதமாயிருந் தெழுதி வந்தாள். ஆகையால் அவருடைய அபிப்பிராயங்களும் கிரந்தங்களும் ஹிந்துக்களுக்குங் கூட அருமையாயிருந்தது. இந்த அம்மாள் சென்ற மாசம் டார்ஜிலிங்குக்குப் போயிருந்தவிடத்தில் வயிற்றுப்போக்கு மாதிரி ஏதோ உபாதிகண்டு தன்கர்மம் முடிந்ததால் தமது குருவோடு ஐக்கியமானார். நல்லவர்கள் இப்பொல்லா வுலகில் நீடித்திருக்கக் கருதார் போலும், ஸ்வாமி விவேகாநந்தரும், அவருடைய மேற்றிசைச் சிஷ்யர்களில் முக்கியமானவரும் சிலாக்கியமானவருமான ஸ்ரீ நிவேதிதை யம்மையாரும் மத்திம வயதில் தானே இத்தேகத்தைத் துறந்து சென்றனர். ஆனால் அவர்கள் புகழுடம்பு பெற்று வாழ்ந்திருக் கின்றமையினால் அவர்களுடைய வாழ்நாள் அவர்கள் தேஹத்தோடு முடிந்துவிட்டதாக எண்ணுவது பிசகு. அவர்கள் இன்னும் புகழுடம்போடு ஜீவித்திருக்கிறார்களென்றே சொல்ல வேண்டும். அதுவே உண்மை.

———:-:———

## Agricultural Machinery.

### வியவசாய யந்திரங்கள்.

சென்னையிலுள்ள மெஸ்ஸர்ஸ் ஸாமுவேல் அண்ட் கம்பெனி அவர்கள் வியவசாய யந்திரங்கள் பல தருவித்து விற்பதில் இந்தியாவின் பல தொழில் விர்த்திக்கு அவசியமான யந்திரங்களைத் தெரிந்தெடுத்து இந்தியர்களுக் குபயோகமாகும்படி விற்று வருகிறார். இந்த கம்பெனியின் தலைவர் காலஞ்சென்ற தனகோடிராஜு அவர்களின் புத்திரர்களில் ஒருவர். இவர் யந்திர தந்திரங்களில் நன்றாகப் பழகிப் பிரவித்தி பெற்றவர். இவருடைய அனுபவத்தைக் கொண்டு இந்தியாவில் உபயோகிக்கச் சாதகமான பல யந்திரங்களைத் தருவித்து விற்பதுமன்றிப் பொருட்காட்சி சாலைகளில் அவைகளைக் காட்டி அவைகள் வேலை செய்யும் விதத்தையும் அவைகளின் உபயோகத்தையும் பலரும் அறியப் பரீக்ஷித்துக்காட்டி வருகிறார். மைசூரில் நடந்த தசரா பொருட்காட்சியில், இந்தக் கம்பெனியார் காட்டிய யந்திரங்கள் மிகவும் மேலாக மதிக்கப்பட்டதன்றி, இவர்களுடைய யந்திரங்களின் தேர்ச்சிக்காக 4 தங்கப் பதக்கங்களும், 4 வெள்ளிப் பதக்கங்களும் இவர்களுக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்டன.

இவர்கள் காட்டிய வியவசாய யந்திரங்களில் முக்கியமானவை.—நீர்ப் பாய்ச்சல் யந்திரங்கள், தாளறுக்கும் யந்திரங்கள், நில சாகுபடி சம்பந்தான யந்திரங்கள். இவைகளன்றி வீட்டிலும் வேலைச் சாலைகளிலும் உபயோகிக்கத்தக்க மாவறைக்கும் யந்திரங்கள், கையினால் வேலைசெய்யத் தக்கனவும், யந்திர வியக்கத்தால் வேலைசெய்யத் தக்கனவும் பலவுள. கரும்பாலைகள் பல அதி நுட்பமான தந்திர யுத்தியினாலமைக்கப் பட்டிருந்தன. காய்ச்சின கரும்பு ரஸத்தைச் சர்க்கரையாகச் செய்வதற்கான யந்திரமொன்று. மிகவும் வேலைப்பாடமைந்ததா யிருந்தது. நெல்லுக் குத்தும் யந்திரங்கள், எண்ணெயினால் இயக்கப்பெறும் (அடக்கமான) யந்திரங்கள் பற்பல இவர்களிடம் விற்பனைக்கிருக்கின்றன. அவற்றில் முக்கியமானது பெட்டர் கம்பெனியாருடைய இஞ்சின்களாம்.

—:—

## Coronation and Christmas Holidays.

### மகுடாபிஷேக, கிறிஸ்த்மஸ் விடுமுறை நாட்கள்.

1911 ஹூத்தில் பின்வரும் தினங்கள் பொதுவான ரஜாநாட்களாக கவர்ன்மெண்டாரால் விளம்பரப் படுத்தப்பட்டிருக்கின்றன:—

1911 ஹூ டிஸெம்பர்மீ 7உ வியாழக்கிழமை.—மாக்ஷிமைதங்கிய சக்ரவர்த்தி சக்ரவர்த்தினியவர்கள் ராஜகோலத்தோடு டில்லி நகர்ப்பிரவேசம் செய்யும் நாள்.

டிஸெம்பர்மீ 12உ வெள்ளிக்கிழமை.—"இம்பீரியல் தர்பார்" நடக்கும் நாள். இன்றையதினம் மாக்ஷிமைதங்கிய சக்ரவர்த்தி சக்ரவர்த்தினியார் முடிசூட்டுவைபவம் இராஜ்ஜிய தர்பார் மூலமாய் பஹிரங்கப்படுத்தப்படும்.

டிஸெம்பர்மீ 25, 26, 27, 29, 30ந்தேதிகள் கிறிஸ்த்மஸ் விடுமுறை நாட்கள்.

பொதுரஜாநாட்களாக விளம்பரப்படுத்தப்படாத பின்வரும் நாட்களில் (1) ஸீகஸ்ட்மஸ் ஆபீஸ், (2) ரிஸர்வ்டிரெஷரி ஆபீஸ், பேபர் கர்ரென்ஸி ஆபீஸ், (3) ஜெனரல் ஸ்டாம்பாபீஸ் இவைகளைத்தவிர மற்ற ஆபீஸ்களெல்லாம் விடுமுறை நாட்போல் மூடப்பட்டிருக்கும். மேற்கண்ட ஆபீஸ்கள் மட்டும் காலை 11-மணிமுதல் மத்தியானம் 1-மணி வரையில் திறந்திருக்கும்.

1911 ஹூ டிஸெம்பர்மீ 23உ சனிக்கிழமை.

1911 ஹூ ,, 28உ வியாழக்கிழமை.

புதுவருஷப்பிறப்பு ஞாயிற்றுக்கிழமையாதலால் அதற்காக மறுநாள் திங்கட்கிழமை விடுமுறையளிக்கப்படும்.

———

கிராமங்கள்:—செங்கற்பட்டு ஜில்லாவில் கிராமங்களின் உபயோகத்துக்காக அக்கிராமங்களைச் சுற்றியுள்ள காடுகளில் சிலவற்றை கிராமத்தார் வசம் ஒப்புவித்து அவர்களே அவைகளைப் பார்த்துக்கொண்டு வரவேண்டியதென்கிற ஏற்பாடு புதிதாகப் பரீக்ஷார்த்தமாய் செய்து பார்த்தார்கள். இப்பொழுது அந்த மாதிரி தென்கன்னடத்திலும் கிராம பஞ்சாயத்துகள் மூலமாக கிராமத்தைச் சுற்றியுள்ள சில காடுகளை கிராமத்தார் உபயோகத்தின் பொருட்டு அவர்கள் விசாரணையில் விட்டுவர ஏற்பாடுசெய்ய உத்தரவாகியிருக்கிறது.

—:—

